A. No. 15726.
29

சாது சங்க] [வெளியீடு 2.

உ
சிவமயம்.
ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

24-3

# வட நாட்டில்,
# ஹரித் துவாரக் கும்ப மேளாவும்,
# தென் நாட்டில்,
# சாதுக்கள் மேளாவும்

இஃது,

மண்டலேசுவாரும், பர சமய கோளரியாரும்,
உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாச்சாரியரும்,
நூறு நூல் கிரந்த கர்த்தரும், (நூறு நூல் இயற்றியவரும்)

திருக் களர்,

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள்

மாணாக்கரும்,

திருப் பூ வண மட ஸ்தாபகரும் ஆகிய

ஸ்ரீ ல ஸ்ரீ

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிக ளவர்களால்

இயற்றப் பெற்று,

மதுரை, ராஜேஸ்வரி பிரசில்
பதிப்பிக்கப் பெற்றது.

விகிருதி] 1950. [ஆவணி

சிவமயம்.

# வட நாட்டில் ஹரித் துவாரக் கும்ப மேளாவும், தென் நாட்டில் சாதுக்கள் மேளாவும்.

अत्रिः— द्वे रूपे वासुदेवस्य चलं चाचलमेव च ।
चलं सन्यासिनां रूपमचलं प्रतिमादिकम् ॥

## 1. மகிமை.

யதி தர்ம சங்கிரகம். — வாசுதேவரு (பகவானு) க்கு சலமும், அசலமும் என இரண்டு ரூபங்க ளாம். சந்யாசிக ளுடைய ரூபம் சல ஸ்வரூப மாம். பிரதிமை (விக்கிரகம்) முதலியன அசல ரூப மாம். என கூறி யிருக்கிறபடியால், சந்யாசிக ளாகிய அநுக்கிரக மூர்த்திகளின் மகிமை அள விறந்தன வாம்.

சப்த மஹா சமுத்திரத்தில் மூழ்கிப், பாதாளத்தில் மறைந்து கிடக்கின்ற விலை மதிப்பு அற்ற முத்து இரத்திநம் முதலியவற்றை வாரி எடுத்துக் கொண்டு வந்து விட லாம். ஆனல், நம் புராணங்கள் கர்ண பரம்பரைக் கதைகளில் பொதிந்து கிடக்கும் உண்மைக ளாகிய இரத்திநங்களைத் தெரிந்து எடுப்பது சுலபம் அல்ல.

விகிருதி வருஷம் சித்திரை மாதம் முதல் தேதி. இன்று புது வருஷப் பிறப்பு. நமது பாரத நாட்டில் வருஷப் பிறப்புக் கூடப் பல் வேறு விதம். தமிழர்கட்குச் சித்திரை மாதம் முதல் தேதி, அதாவது 13-4-50 ஆகும். ஆந்திர கர்நாடக வாசிகட்கு யுகாதி,

15726
24-3



பண்டிகை, அதாவது 19-3-50 ஆகும். வங்காளிகட்குச் சித்திரை மாதம் இரண்டாம் தேதி, அதாவது 14-4-50 ஆகும். குஜராத்திகட்கு தீபாவளி அன்று புது வருஷப் பிறப்பு. இது போன்ற ஒரு சாதாரண விஷயத்திலேயே பல் வேறு கொள்கைகள், என்றால் சூக்ஷ்ம மான தெய்வீக ஆத்மீக விஷயங்களில் சொல்லவும் வேண்டுமோ.

இன்று ஹரித் துவாரத்தில் பூரண கும்ப மேளா வருகிறது. ஹரித் துவாரத்தின் மிகப் பழமை யான பெயர் கங்காத் துவாரம் ஆம். இமய மலையி லிருந்து கங்கா நதி, இத் தலத்தி லிருந்தே சம தலத்தில் பாய்ந்து ஓடுகிறது. ஆதலால், இத் தலம் கங்கைக்குத் துவாரம் போல் விளங்குகின்றது என்று கூறுதல் பொருந்தும். மகா பாரதம் முதலிய கிரந்தங்களில் இப் பெயரே காணப்படுகின்றது. இன்னும், கபில ஸ்தாந், மாயா போன்ற நாமங்களும், சமீப காலத்தி லிருந்து, ஹரித் துவாரம் என்றும், ஹரத் துவாரம் என்றும் நாமங்களும், வழங்கி வருகின்றன. ஸ்காந்த புராணத்தில், கேதார கண்டம் ஒரு முக்கிய பாக மாகும். இதில், ஹரித் துவாரம் பற்றிய வர்ணனைகள் காணக்கிடக்கின்றன. ஹிமாலயத்தில் சுமார் பதி னோ ராயிரம் அடி உயரத்தி லிருக்கும் பத்திரி நாத் க்ஷேத்திரத்திற்குப் போகிற மார்க்கம் என்பதனால், ஹரித் துவாரம் என்றும், சுமார் பன்னி ராயிரம் அடி உயரத்தில் இருக்கும் கேதார நாத் போகிற வழி என்பதனால், ஹரத் துவாரம் என்றும், அப் பெயர்கள் வழங்க லாயின எனல் ஆகும்.

ஹரித் துவாரத்தின் மகிமை அள விடற்பால தன்று. மேலே ஆராய்ந்தபடி பாரத நாட்டிற்கே உயிர் நாடி போல் விளங்கி, பொன் விளையும் நாடு எனப் புகழ் சம்பாதித்துக் கொடுக்கும் புநித தெய்வீக ஜீவ நதி, இத் தலத்தின்கண் தான் தொடங்குகின்றது. ஹரித் துவாரத்தி லிருந்து சுமார் பதி னன்கு மைல் தூரத்தில், ரிஷிகேச ஸ்வர்க்காசிரமம், லக்ஷ்மண ஜூலா, முதலிய அதி பவித்

திர மான ஸ்தலங்கள் இருக்கின்றன. ரிஷிகேசத்தில் பாய்ந்து ஓடும் புண்ணிய கங்கையும், அதன் கரையில் அமைந்திருக்கும் சீதா ராம திருக் கோவிலும், யாத்திரீகர்களையும், பக்த கோடிகளையும், இருத இருத்தியர்கள் ஆகர்ஷிக்கின்றன. ஸ்ரீ லக்ஷ்மணர் தவம் புரிந்த தலம் என்று சொல்லப்படும் லக்ஷ்மண ஜூலா தேவாலயமும், ஸ்வர்க்க ஆசிரமத்தினைப் பிணைக்கும் நவீன முறைத் தொங்கு பாலமும், மக்கள் மனதைக் கொள்ளை கொள்கின்றன. காளி கம்பளி வாலா எனப் பிரசித்தி பெற்ற மகானால் ஸ்தாபிக்கப் பெற்று இனிது நடந்து வருகிற பற் பல மடங்கட்கும், தர்ம சாலைகட்கும், அன்னச் சத்திரங்கட்கும், தலைமை தாங்கி நிற்கும் ஸ்வர்க்க ஆசிரமம் என்னும் பெரியது ஓர் ஆசிரமம் இருக்கின்றது. இது தவிர, இன்னும் அநேக சாது சந்யாசிகளின் ஆசிரமமும், பர்ண சாலைகளும், சின்னஞ் சிறு கோவில்களும் நிறைந் துள்ளன. காளி கம்பளி வாலா சமாதியையும் காண லாம். ரிஷி கேச மார்க்க மாகவே கேதார நாத், பத்ரி நாத் யாத்திரையைத் தொடங்க வேண்டும். மேற் கண்ட எல்லா ஸ்தலங்கட்கும் யாத்திரை செய்ய, ஹரித் துவாரம் நடு நாயக மாக விளங்குகிறது. ஹரித் துவாரம் ஒரு சிறு முனிசிபாலிடி யாகும். இதில், மாயா பூர், ஜக தீச பூர், ஜுவாலாப் பூர், கன் கல், பிரஹ்ம குண்டம், பீம குண்டம், குஷாவர்த்த காட் முதலிய பாகங்கள் அடங்கி யுள்ளன. பிரஹ்ம குண்டத்தைப் பற்றி ஆராய்வதற்கு முன் பொது வாய் ஹரித் துவாரத்தில் காண வேண்டிய முக்கிய ஸ்தலங்களைக் கூற வேண்டும். வில்வகேசுவரம் — மாயா தேவி — தக்ஷ காட் — சதி குண்டம் — சண்டி பஹாடு (குன்று), மானஸா பஹாடு, பீம் குண்டம் — குஷாவர்த்த காட் முதலியன முக்கியமானவை ஆகும். கன் கல் என்ற பெயர் புராணங்களில் காணப்படுகிறது. நிர்வாணி அகாடாவில், கபில முனிவருக்குப் பூஜை நடை பெறுகின்றது. கபில முனிவர் அணிந்திருந்த கவசமும், கமண்டலமும், இன்னும் இருக்கின்றன என்று சொல்லுகின்றார்கள். அதே போல், தர்மர்

தரித்திருந்த கிரீடம் இன்னும் இருப்பதாகவும், அதற்கு உத்சவம் நடப்பதாகவும் சொல்லுகிறார்கள். குஷாவர்த்த (உமி சூழ்ந்த) காட் என்னும் ஸ்தலத்தின்கண் பிதுர்கட்குச் சிரார்த்தம் செய்கிறார்கள். பீம கொடா என்பது ஒன்று, அதாவது, பீமன் முழங்காலால் பூமியை இடித்துப் பாதாளத்திலிருந்து கங்கையை வரவழைத்தான் என்கின்றது ஒரு புராணக் கதை. ஆகவே, இவ்வொன்றைப் பற்றிய புராணக் கதைகள் பல வுண்டு. அதை இங்கு விரிப்பில் பெருகும் அதனால் விரித் திலம்.

தக்ஷ காட், சதி தேவிக்கு உரிய முக்கிய ஸ்தல மாகும். மாயா தேவியின் திரு நாமமே, ஹரித் துவாரத்துக்கு மாயா என்ற பெயரை அளித்தது என்று கூற லாம். இங்கே தக்ஷப் பிரஜாபதியின் திரு மகள் தாக்ஷாயணி தவம் புரிந்து சிவ பெருமானைப் பதி யாகப் பெற்றாள். தக்ஷன் பெரு வேள்வி செய்ததும், சிவ பெருமானை யாகத்திற்கு அழைக்காமல் அவமதித்ததும், தாக்ஷாயணி தேவி, பதியின் விருப்பத்திற்கு மாறாகவே, தன் தகப்பன் செய்யும் வேள்விக்கு வந்ததும், அங்குத் தகப்பன் கூறிய, பதி பற்றிய இகழ் மொழிகளைப் பொறுக் கொணாது ஹோம குண்டத்திலேயே தேகத்தினை விடுத்ததும், அதன் காரண மாகச் சிவ பெருமானது கோபாக்கினியில் தோன்றிய வீரபத்திர தேவனால் தக்ஷனும், அவனது வேள்வியும், சின்னா பின்ன மாக்கப்பட்டதும், ஆகிய வர லாறுகள் பல புராணங்களில் காணப்படுகின்றன. தமிழர்கள். தக்ஷ யாகப் பரணி என்னும் நூலை நன்கு அறிவார்கள். தாக்ஷாயணி இதன் பிறகு சதி நாமம் பூண்டு பதி விரதைகள் எல்லாருக்கும் திலக மாகவும், குறிக் கோளாகவும் விளங்குகிறாள். இன்றைக்கும் சதி தேவாலயத்திற்கு அருகில் காலம் சென்ற சுமங்கிலிப் பெண் மணிகட்கு ஞாபகச் சின்ன மாகக் கல் நாட்டி வருகிற பழக்கம் நடந்து வருகிறது.

பிரஹ்ம குண்டம்:— நிச்சய மாக இதன் உத்பத்தி வர லாறு சொல்வதற் கில்லை. பகீரத மஹா ராஜா, கபில முனிவரின் சாபத் தால் மடிந்து நீறுகிப் போன தன் மூதாதைக ளான சகரர்களை, நற் கதி அடைவிக்கு மாறு கடுந் தவம் புரிந்து சிவ பெருமானின் அருளைப் பெற்றுக், கங்கையைக் கொண்டு வந்தது, இந்தத் தலந் தான் என்கின்றது ஒரு வர லாறு.

## 2. ஸ்நாநம் செய்தல்.

பண்டைய காலத்தில், சுவேத மஹா ராஜா, இங்கே தவம் புரிந்து பிரஹ்ம தேவரின் அருள் பெற்ற போது, எல்லாப் புநித தீர்த்தங்களும், இந்த இடத்தில் பிரசந்ந மாய் இருக்கவேண்டும் என்றும், இதில் ஸ்நாநஞ் செய்பவர்கள் எல்லாவித பாபங்களும் நீங்கி, நான்கு வித புருஷார்த்தங்களும் எளிதில் பெற வேண்டும் என்றும் கேட்க, பிரஹ்ம தேவரும் மநம் உவந்து, "அங்ஙனமே ஆகுக" என்று ஆசீர்வதித்து, மேலும் தம் பெயராலேயே "பிரஹ்ம குண்டம்" என்று பூ வுலகில் அவ் விடம் பிரசித்தி அடை யும் என்று, திரு வாய் மலர்ந் தருளினர். இப் பிரஹ்ம குண்டமே ஹரித் துவாரத்தில் மநதைக் கவர்ந்து உள்ளத்தைக் குளிர்வித்துச் சாந்தியை அளிக்கின்ற ஸ்தல மாகும்.

பிரஹ்ம குண்டத்திற்கு இரண்டு மூன்று மைல் மேல் பாகத் தில், "சப்த தாரா" என்னும் ஏழு பிரிவுகள் கொண்ட கங்கை இருக் கின்றது. இவற்றில், சிலவற்றைக் கால்வாய்கள் மூலம் உணவுப் பொருள் உத்பத்திக்கு நீண்ட காலமாகவே உபயோகித்து வருகிறுர் கள். கங்கையின் ஒரு பிரிவுக்கு, "நீல தாரா" என்று அழைக் கின்றார்கள். பிரஹ்ம குண்டம் என்பது சுமார் பதி னுயிரம் சதுர அடி கொண்ட ஒரு சிறு பகுதியே யாகும். பிரஹ்ம குண்டத்தின் கீழ்ப் பாகத்தில் மற் ெறாரு கங்கையின் பிரிவு ஓடுகிறது. அப் பிரி வான கங்கைக் கரையிலே பிரஹ்ம குண்டத்தின் தொடர்ச்சி

யாக, தென் வடல் ஆகச் சுமார் இரண்டு பர்லாங் நீளத்தில் விசால மான ஒரு மேடை நிர்மாணம் செய்யப்பட்டிருக்கின்றது. இதில், பல் லாயிர மக்கள் விசேஷ காலங்களில், பஜனை சிரவணம் போன்றவைகளில் கலந்து அமர்ந்து இருந்து கேட்டு ஆநந்திக்க வும், நீர் ஆடவும், பெரிதும் பயன்படுகின்றது. இம் மேடையின் அருகில், நீல நிறத்துடன் புரண்டு ஓடும் கங்கை நீரின் தோற்ற மும், பிரஹ்ம குண்டத்தில் ஒவ் வொரு நாளும் மாலையில் கங்கா தேவிக்கு மூவர், தனித் . தனி யாகத் தீபாராதனை செய்வதும்' உள்ளம் பூரிக்கச் செய்யும் காஷி யாகும்.

## 3. கும்ப மேளா.

பன் னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை, ஹரித் துவாரம் — பிரயாகை (அலகா பாத்) நாசி — உஜ்ஜெயினி என்னும் புண்ணிய ஸ்தலங்களில் முறையே நடை பெறும். ஹரித் துவாரத்தில் கும்ப மேளா, கும்ப ராசியில், குருவும், மேஷ ராசியில், சூரியனும், வரும் கும்ப யோகத்திலும், பிரயாகையில், பூர்ண கும்ப மேளா, குரு மேஷ ராசியிலும், சூரியன் மகர ராசியிலும் வரும் மேஷ யோகத் திலும், நாசிக்கில் கும்ப மேளா, குரு சிம்ம ராசியிலும், அதே ராசியில் செவ்வாயும், சுக்கிரனும், வரும் சிஹ்ம யோகத்திலும், (இத் தலத்தில் சாதுர் மாசியம் விசேஷம். அதாவது ஆஷாட சுக்ல ஏகா தசியி லிருந்து கார்த்திகை சுக்ல ஏகா தசி வரையிலும் உள்ள நான்கு மா தங்களும் விசேஷ திநங்க ளாம்.) உஜ்ஜெயினியில் கும்ப மேளா, குரு சிஹ்ம ராசியிலும், சூரியன் மேஷ ராசியி லும், வரும் கும்ப யோகத்திலும், பூர்ண கும்ப மேளா நடை பெறு கின்றது. மேலகம் — யோகம் — சேர்தலுக்கு ஆம். மேலா — மேளா, மேலகம் — மேளகம், என்பன ஒரு பொருட் சொற்கள் லகர, ளகர அபேத மாம்.

இக் கும்ப யோகத்தின் உத்பத்தி ஊர்ஜ்ஜித மாகத் தெரியா விட்டாலும் முக்கிய புராண வரலாறுகளால் பின் வரும் ஆறு அறியப்படுகின்றது.

தேவ அசுரர்கள் அமிர்தம் பெறுவதற்குத் திருப் பாற் கடலைக் கடைந்தது. அதன் பல னாக, அமிர்த கலசம் முதலிய பொருள் கள் தோன்றியன. இவ் அமிர்தத்தின் பொருட்டு தேவ அசுரர் களுக்குள் கடும் போர் நடந்தது. அசுரர்கள் வஞ்சிக்கப் பெற்று, அமரர்களே அமிர்தம் அடைந்தது முதலிய வரலாறுகள் அனை வரும் அறிந்ததே. பன்னிரண்டு ஆண்டுகள், அதாவது பன் னிரண்டு தேவ நாட்கள் இதன் காரண மாகப் போர் நிகழ்ந்தது என்றும், மேற்படி போர்க் காலங்களில், அமிர்த கலசம் மேற் கூறிய நான்கு ஸ்தலங்களில், முறையே இந்திர குமாரன் ஜயந்திரன் முதலியோர்களால் மறைத்து வைக்கப்பட்டிருந்தது என்றும், இது காரணம் பற்றியே, கும்ப யோகங்கள் நான்கு ஸ்தலங்களில் மட்டும் சம்பவிக்கின்றன என்றும் கூறுவர்.

## 4. முக்கிய குறிப்புக்க ளாவன.

ஹரித் துவாரத்தில் நடை பெற்ற இந்தப் பூர்ண கும்ப மேளாவில், சில முக்கிய ஸ்நான தினங்கள் உண்டு. எல்லாவற்றிற் கும் அதி முக்கிய மானது, தமிழ் விகிருதி வருஷம் சித்திரை மாதம் முதல் தேதி வியாழக் கிழமை (13—4—1950) ஆகும். அன்று காலை மூன்று மணி முதல் மாலை ஏழு மணி வரை நடந்தேறிய ஸ்நானம் ஆகும். இந்த ஸ்நான விசேஷ வைபவத்திற்கு இரு பது லக்ஷம், பக்த கோடிகளும், ஆஸ்திகர்களும், அன்பர்களும், வந்து கூடி யிருந்தனர். இந்தப் பிரஹ்மாண்ட மான விராட் சொரூபக் காக்ஷி வருணிக்கற்பாலது அன்று. இதனைத் தெரிசித்தவர்கள் அடைந்த ஆநந்தத்திற்கு எல்லை யில்லை என்றே சொல்ல லாம்.

தென் னாட்டில், திருக் கோவில்களில் எழுந்தருளி யுள்ள விக்கிரக ரூப அசர மூர்த்தி ஆராதனையே முக்கிய மாகும். எல்லா வந்தனை வழிபாடுகளும், உத்சவங்களும், திரு விழாக்களும், ஆலயங்களையும், அசர விக்கிரகங்களையும், சம்பந்தப்பட்டனவே ஆகும். வட நாட்டிலோ, முக்கிய மாக, இக் கும்ப ஸ்நாந திநங் களில், சர மூர்த்திக ளாகிய சாது சந்யாசிகளையே வணங்குவதும், பூஜிப்பதும், பாத தூளிகளைச் சிரசில் வகித்துக் கொள்வது போன்றதுமே, முக்கிய வழிபாடுகளும், சடங்குகளும், ஆகும். தென் னாட்டில் கும்ப கோணத்தில், மஹா மகம் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை, மாசி மாதத்தில் நடை பெறுகின்றது. இதில், எல்லாச் சநங்களும் ஸ்நாநம் செய்வது விசேஷ மாகக் கருதப்படும். தவிர சில க்ஷேத்திரங்களில் பன்னிரண்டு கருட சேவை, இரு பத்தைந்து ரிஷப வாஹநக் காக்ஷி போன்ற பிரபல உத்சவங்கள் நடை பெறுகின்றன வல்லவா? அத் தருணத்தில் சாதாரண ஜநங்கள் இன்ன வூர் சுவாமிக்கு, நகை ஆடை அலங் காரம் முதலிய ஜோடனைகள் அற்புத மாக இருக்கின்றன என் றும், மற்றொரு உத்சவப் பெருமாளுக்குப், பூ அலங்காரம் அபரி மிதம் என்றும், பேசிக் கொள்வது போலவே, கும்ப மேளா ஊர் வலத்திலும், முதலில் அகாடா யானை அலங்காரம் அபூர்வம் என்றும், மத்தியிலும், கடைசியிலும் வந்த அகாடா வாகநங்களின் அலங்காரம் அதி விமரிசை யாக இருந்தது என்றும், அள வளாவிக் கொள்கிறார்கள். ஏற்கனவே குறிப்பிட்டபடி தென் நாட்டுக் கோவில்களில் உத்சவங்களின் மூர்த்திக ளாகிய அசர தெய்வங் கட்கு என்ன ஸ்தாநமோ, அதே ஸ்தாநத்தை வட நாட்டில் சர மூர்த்திக ளாகிய சாது சந்யாசிகட்கு வழங்குகின்றார்கள். தென் னாட்டில் மடங்கள் என்பதற்கு ஒப்பாக, வட நாட்டில், "அகாடா" என்பார்கள். தென் னாட்டில், சிருங்க கிரி — கும்ப கோணம் போன்ற ஸ்ரீ சங்கராச்சாரியார் மடங்கள், கோவி லூரில் உள்ளது

போன்ற வேதாந்த மடங்கள், நான்கு நேரி — அகோபிலம் போன்ற வைஷ்ணவ மடங்கள், திரு வாவடு துறை — திருப் பனந் தாள் — தரும புரம் — சூரிய ஞர் கோவில் முதலிய சைவ மடங்கள் போலவே, வட நாட்டில் "தச நாமி" என்னும் ஸ்ரீ சங்கராச்சாரிய சம்பிரதாய மடங்களும், (உதாசீந சாது) உதாசி — வைராகி — நிர்மலா (சாது) போன்ற வேறு வேறு மடங்களும் உண்டு. இம் மடங்கள் ஒவ் வொன்றுக்கும் லக்ஷக் கணக்கில் பெறு மான முள்ள சொத்துக்கள் மிகுதியாக இருக் கின்றன.

இத் தகைய கூட்டங்கட்குத் தலைமை வகிப்பவர்கட்கு, "மண்டலேசுவரர்" என்றும், மடத்திற்குத் தலைவர்களை, "மஹந்துக்கள்", "மடதாரிகள்" என்றும், அழைக்கின்றார்கள், எல்லாருக்கும் தலைவரை, "மஹா மண்டலேசுவரர்" என்று அழைக்கின்றார்கள்.

பூர்ண கும்ப ஸ்நாநத் தன்று கும்ப யோக நேரத் தொடக் கத்தி லிருந்து சில மணி நேரம் வரையில், இவ் எல்லாச் சாது சந்யாசிகளே அல்லாது, வேறு எவருக்கும் பிரஹ்ம குண்டத்தை நெருங்கவோ, அதில் ஸ்நாநம் செய்யவோ, அதிகாரம் இல்லை. இதில், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும், அதிகாரிகளும், சிப்பந்தி களும், மிக்க கவன மாகப் பாதுகாக்கின்றார்கள். மேற் கூறிய அகாடா சாது சந்யாசித் திருக் கூட்டங்களும், கோஷ்டி கோஷ்டி யாக ஏற்பாடாகி யிருக்கும் நியமநத்துடன், ஒன்றன் பின் ஒன் றாக வரிசைக் கிரமத்தில் செல்வது வழக்கம். மேற் சொன்னபடி அவ ரவர்கள் நேரத்தில், அவ ரவர்கள் மடத்தி லிருந்து, மண்ட லேசுவரர், மஹந்துக்கள், மடதாரிகள் முதலாயினோர் அதிக விமரிசை யாக அலங்கரிக்கப்பட்டிருக்கும் வாகநங்களிலும், மற்றைய சாது சந்நியாசிகள் நடந்தும், யானை முதலிய ஆடம்பர மான விருதுகள் முன் செல்ல, பெரும் பெரும் ஊர் வல மாகச் சென்று

பிரஹ்ம குண்டத்தில் ஸ்நாநம் செய்து திரும்புகின்றனர். இந்த அரிய ஊர் வலங்கள் சுமார் ஐந்து ஆறு மைல் நீளத்தில் பவனி வருகின்றன. இதைக் கண்டு ஆநந்திக்கப் பக்த கோடிகள் அனே வரும் காலையில் இருந்தே பாதையின் இரு பக்கங்களிலும் வரிசை வரிசை யாக அமைதியுடன் அமர்ந்து, எவ் விதக் கஷ்டத்தையும் பொருட்படுத்தாது பேர் உணர்ச்சி ததும்ப, அவர்கள்பால் அளவிட் டறியாத பக்தி உடையவர்க ளாய்ப் பூ மாரி பொழிந்தும், தாநம், வஸ்திரம், பழங்கள், முதலிய எண் ணிறந்த பொருட்களைக் காணிக்கை யாக வழங்கியும், "சநாதந தர்மகீ ஜே", "சாது சந்தகீ ஜே", "நமப் பார்வதி பதயே", "ஹர ஹர" "ராதா கிருஷ்ணகீ ஜே" போன்ற பல் வேறு வித மான ஜே கோஷங் களை முழங்கி, தங்கள் தங்கள் ஆநந்த ஆரவாரத்தைத் தன்னை மறந்த நிலையில் காட்டிக் கொண்டாடுகிறார்கள். இவ் அபூர்வக் காக்ஷி, உள்ளத்தை உயர் நிலைக்கு ஏற்றி விடுகிறது. சுருங்கச் சொல்லில், தென் னாட்டில் உத்சவ காலங்களில் வீதிகள் தோறும் எழுந்தருளும் அசர மூர்த்திக ளாகிய தெய்வங்கட்கு நடத்தும் வந்தனை வழிபாடு சோடச உபசாரணைகள் எல்லாம், இச் சாது சந்யாசிக ளாகிய சர மூர்த்திகட்கே செய்கிறார்கள். இவ் வித சாது சந்யாசி அடியார் பெரியார்களிடத்து, மக்கட்கு இருக்கும் அளவிலாப் பக்தியும், கங்கா ஸ்நாந பல நம்பிக்கையும், காண்போர் கட்கு, இப் புநித பாரத நாட்டின் ஜாதி இன வகுப்பு வேற்றுமை அடியோடு இல்லாது போன தாகத் தோன்றும் சீர்மையும், சநாதந தர்மம், என்றும் ஒரு வித காரணத்தினாலும், அழி வடைய மாட்டா தென்பதை வெள் ளிடை மலை போல் விளக்குகின்றன.

## 5. கும்ப பர்வம்.

சுக்ல யஜுர் வேதம் அதர்வ வேதம் இவற்றில் கும்ப பர்வத் தைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இக் குறிப்புகள்

ருது (பர்வ) வர்ணனைக ளாகவும், ஜோதிஷ சம்பந்த சாஸ்திர மாக வும், தென்படுகின்றன.

## 6. முடி வுரை.

புராணங்களில் கூறும் வர லாறு எங்ஙனம் ஆயினும், இப்போது நிகழ்ந்து வரும் கும்ப மேளாக்கள் ஸ்ரீ சங்கராச்சாரியரது காலத்தி லிருந்து தான் பிராபல்யம் அடைந்திருக்க வேண்டும் என்பதற்கு ஆதாரங்கள் பல காணக்கிடக்கின்றன. ரயில், தந்தி, தபால், ரேடியோ இல்லாத காலங்களில் திக் விஜயம் செய்து, சநாதந தர்மத்தினை நிலை நாட்டி அழி வற்ற வெற்றி கொண்டது பகவத் பாத ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிக ளவர்களின் மிக மிக முக்கிய மான தோர் திருச் செய லாகும். மேலும், ஒவ் வொரு மூன்று வருஷத்திலும் மேற் கூறிய நான்கு ஸ்தலங்களிலும், சாது சந்யாசிகள் ஒன்று கூடிச் சநாதந தர்மத்தின் மஹிமைகளைப் பக்த கோடிகட்கு எடுத்துக் காட்டுதற்கும், அதன் வளர்ச்சிக்கும், மக்களை உய்விக்கும் தொண்டுக்கும், ஆதார மாக விளங்குகிறது இம் மேளா. பல் நூற் றூண்டுக ளாகச் சநாதந தர்மம் சற்றும் சீர் குலையாது நிலை பெற்றிருக்க, பூமியைத் தாங்கி நிற்கும் அஷ்ட கஜ (எட்டு யானை) ங்கள் போன்று, இந் நான்கு ஸ்தல மேலாக்களும் மிளிர்கின்றன. சென்ற ஹரித் துவார மேளாவில், சுமார் 40 லக்ஷத்திற்கு மேல் மக்கள் கூடினர் என்பர். இம் மேளாவிற்குப் பெரும் பாலோர் வட மேற்கு எல்லைப் புற மாகாணம் பஞ்சாப் சிந்து முதலிய பிரதேசங்களி லிருந்தே வருவது வழக்கம். இவ் வாண்டு மேளாவில், இம் மூன்று பிரதேச ஹிந்துக்களின் கஷ்ட நஷ்ட மான நெருக்கடி நிலைமை அனைவரும் அறிந்ததே. ஆனாலும், இந்த மேளாவிலும் கூட பொது வாக, இந்தியாவின் பல பகுதிகளி லிருந்தும், சிறப்பாக மேற் கூறிய மூன்று பிரதேசங்களில் இருந்தும், சுமார் 20 லக்ஷம் பெயர்கட்கு அதிகமாகவே வந்திருந்தார்கள்

என்றால், இந்தச் சாது சங்க மேளாவின் மகிமையும், மக்களின் பக்தியும், சொல்லாமலே விளங்கு மன்றோ?

ஒரு வித முயற்சியும் இன்றி, இத் தகைய பிரமிக்கத் தக்க, லக்ஷ உபலக்ஷ மக்கள் கொண்ட பிரமாண்ட மான கூட்டம் கூடு வது எளி தல்ல. இதன் உண்மை நேரில் பார்த்தவர்கட்கே தோன்றும். யாம் பிரயாகை மேளாவை மூன்று முறையும், கும்ப கோணம் மஹா மகத்தை நான்கு முறையும் நேரில் பார்த்திருக் கிறோம்.

ஆகவே, இப் பேர்ப்பட்ட அரும் பெரும் தருணத்தை அனை வரும் தகுந்த முறையில் எல்லாத் துறையிலும் முன் னேற்றம் அடைவதற்குப் பயன் படுத்திக் கொள்வது நம்மவர்களின் கடமை யாகும்.

இவ் வாண்டு நடந்த கும்ப மேளாவிற்கு வந்த கூட்டங்களை யும், சாமான்களின் போக்கு வரத்துக்களையும், அடக்கி ஆளவும், சுகாதார வசதிகளை ஏற்படுத்தவும், தக்க எச்சரிக்கைகளை முன் னாலே அரசியலார் கைக்கொண்டனர். யாத்திரீகர்களின் சுக வசதிக்கு ஏற்பாடு செய்யத் தொண்டர்களின் படை யொன்று பணி புரிந்து வந்தது. ஒவ் வொன்றும் ஒழுங் கான முறைப்படி அமைக் கப்பட்டிருந்ததும் குறிப்பிடத் தக்கது.

## 7. கருத்து.

இங்ஙனம் வட நாட்டில் ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிக ளவர் களின் முயற்சியால், மூ வாயிரம் வருஷ மாக இச் சாது சங்க மேளா, அவிச்சின்ன மாக, (இடையீடின்றி) தா னாக, விமரிசை யாக, மநதைக் கொள்ளை கொண்டு, பக்தியில் பரவச மாகும்படி செய்து கொண்டு நடந்து வருவது போலத், தென் னாட்டிலும், அதிலும் மாநுஷ லீலா விக்கிரக மாகிய ஸ்ரீ சங்கர பூஜ்ய பகவத் பாதாசாரிய ஸ்வாமி கள் அவதரித்த நாட்டில், சாது சங்க மேளா நடத்தா திருப்பது பெருங் குறை யென, இற்றை ஞான்று உணர்ந்து, அத்வைத

வேதாந்த மாகிய கோவிலூர் மடம் முதலிய மடங்களைச் சார்ந்த சாதுக்கள் அனைவரும் ஒருங்கு கூடி ஆராய்ச்சி செய்து, தென்னாட்டில் தீர்த்த வாசப் பழக்கம் இன்மையால், வருஷம் ஒரு முறை சாதுக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, மூன்று தினங்கள் ஓரிடத் திருந்து, பக்திமான்களுக்கும், பலருக்கும், உபயோகம் ஆகும்படி, பிரஹ்ம ஞானம், அதன் சாதனங்களை அநுஷ்டித்தும், ஆராய்ச்சி செய்தும், பலருக்கும் விளங்கும்படி செய்ய வேண்டும் என்றும், முடிவு செய்தார்கள். அதற்கு ஆரம்பத்தில் தென்னாட்டில் மடங்கள் தான் வாச ஸ்தல மாகும் என்று நூற்றெட்டு மடங்களைத் தேர்ந்தெடுத்தார்கள். இவ் வாறுய மடங்களில் வருஷம் ஒரு முறை சாது சங்க மேளா நடை பெறும். தென் னாட்டில் கும்ப கோணத்தில், மாசி மாதத்தில் மகா மக ஸ்நானமும், மாயூரத்தில் ஐப்பசி மாதத்தில், துலாக் காவேரி ஸ்நானமும் நடை பெறுகிறது. கும்ப கோணத்தில், கும்ப கோணம் சங்கராச்சாரியார் மடத்தாரும், திரு வாவடு துறை மடத்தாரும், கும்ப கோணம் வீரசைவ சாரங்க தேவர் மடத்தாரும், ஸ்நானம் செய்வதாகத் தெரிகிறது. மாயூரத்தில், திரு வாவடு துறை மடத்தாரும், தர்ம புரம் மடத்தாரும் ஸ்நானஞ் செய்யப் போவதாகத் தெரிகிறது. இவ் விரண்டிடங்களில் நடக்கும் ஸ்நானம், வட நாட்டில் நடக்கும், சாது கும்ப மேளாப் போன்ற தல்ல, பொது ஜனச் சனங்கள் புண்ணியங் கருதிப் போவது ஆகத் தெரிகிறது. அதனால், இவ் விரண்டும் சாதுக்கட்கே உரித் தானது என்று கூற முடியாது, சாதுக்கட்கே உரித் தாக உள்ள, சாது சங்க மேளா வாகிய, இதனை நிர்விக்கினமாக நிறைவேறும்படியாகவும், வட நாட்டில் சர மூர்த்திக ளாகிய சாது சந்யாசிகளைச் சனங்கள் பக்தி மேலிட்டுச் சாக்ஷாத் கடவுளாகக் கொண்டாடுவது போலத், தென் னாட்டிலும், சர மூர்த்திக ளாகிய சாது சந்யாசிகளை எல்லாரும் கொண்டாடுமோறும், எல்லாம் வல்ல ஈசன் அருள் புரிய வேண்டும்.

விகிருதி
வைகாசி } காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,
திருப் பூ வணம் வேதாந்த மடம்.

உ சிவமயம்.

## இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம் மடம்,

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் இயற்றிய நூல்கள். பதிப்பித்தன.

1. வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. ரூ. 2—8
2. விசார சாகரம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. 2—4
3. வியாச தாத்பர்ய நிர்ணயம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—8
4. வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—8
5. நைஷ்க்கர்ம்ய சித்தி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—8
6. வேதாந்த பரிபாஷை. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—7
7. ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—4
8. வேதாந்த சஞ்ஞா. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—2
9. ஹரி மீடே, ஹரி தத்வ முக்தாவலி. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0-12
10. ஈசாவாஸ்ய உபநிஷத்—சங்கர பாஷ்யம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—4
11. மண்டல பிராஹ்மண உபநிஷத் – ராஜயோக பாஷ்யம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 0—4
12. தாந்திரிக த்வைத சைவ கண்டநம். வசநம். (சூட்டுக் கோல் – கட்டாரி – புச்சம்). 1—0
13. பக்தி (வைராக்ய) சதகம். தோத்திரம், பத உரை. 0—3
14. வைராக்ய தீபம். பத உரை. பொழிப் புரை. 0—8
15. சிடாசாரம். பால போதினி உரை 0—8. 16. ஸ்தோத்திர ரச மஞ்சரி கவி 100. 0—4
17. அத்வைதிகட்கும், அதிஷ்டாநத்தி லிருப்பவர்கட்கும், ஓர் அறிக்கை. 0—2
18. வட நாட்டில் ஹரித் துவாரக் கும்ப மேளாவும், தென் னாட்டில் சாதுக்கள் மேளாவும் வசநம். 0—2
19. சாது சங்க நிறுவல் விழாக் கூட்ட வைபவம். வசநம். 0—2
20. திருக் களர், வீர சேகர ஞாந தேசிக சரிதம். வசநம். 1—0
29. வேதாந்த சாஸ்திர ரத்நாவலி 9 புத்தகம் சேர்ந்தது. 3—0

LIBRARY

30. பஞ்சதசி கவி 0-10. 33. கீதாத் திரயம் (பகவற் கீதை, பிரஹ்ம கீதை, ஈசுவர கீதை) கவி. ரூ. 1—4
35. விவேக சூடாமணி — அஞ்ஞவதைப் பரணி இரண்டு சேர்ந்தது கவி. 1—0
36. வாசிட்டம் கவி 2055. 2—4


LIBRARY, KOVILOOR
A. No. 15726

## அச்சாக வேண்டியன.

1. யுக்திப் பிரகாசம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு.
2. தர்க்க சங்கிரகம் — தீபிகை உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
3. சப்த பதார்த்தீ — தர்க்கம் — வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
4. காணாத சித்தாந்த சந்திரிகை — தர்க்கம் — வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
5. பேத திக்காரம் — சத் கிரியை என்னும் உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
6. மூர்க்க சதகம் — பத உரை — சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
7. பிரபோத சுதாகரம் — பத உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
8. கணேச கவசம் — பத உரை — சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
9. கணேச கவசம் தமிழ் கவி — உரை. 10. விவேக சூடாமணி - பத உரை.
11. பக்தி சதகம். பத உரை. பொழிப் புரை.
12. நாநா ஜீவ வாதக் கட்டளை — சத்யார்த்தப் பிரகாசிகை உரை.
13. கீதா சாரத் தாலாட்டு — லகு சந்திரிகை உரை. 14. மேற்படி. குறிப்பு உரை.
15. சசிவந்ந போதம் — பதார்த்த பாஸ்கரன் உரை. 16. மஹா ராஜத் துறவு — மகப்பிரசாதினி உரை.
17. வேதாந்த சூடாமணி — சந்தோஷ தாயினி உரை.
18. ஸ்திரீ புருஷ ஜாந மரண ரஹஸ்யம். வசநம். 19. சிவ சங்கராவதாரம் — சுலோகம் — வசநம்.
20. பட்டினத்தார் பாடல் — உரை. 21. சமாதி விதி. வசனம். 22. சந்யாச விதி. வசநம்.
23. பகவற் கீதை 15-வது அத்தியாயம் — சம்ஸ்கிருத — பத உரை. தமிழ் கவி உரை.
24. காசிகாநந்த விஜயம். வசநம். 25. சங்கர விஜய விலாசம் — வசநம்.
26. வீர சேகர ஞாந தேசிக சரிதம். கவி 1500. 27. கைவல்ய நவநீதம் — பத சார உரை.

சிவமயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம.

# சாது சங்க நிறுவல் விழாக் கூட்டவைபவம்.

இது

மண்டலேசுவரரும், பர சமய கோளரியாரும்,
உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாச்சாரியாரும்,
சத சாஸ்திர கர்த்தரும், (நூறு நூல் இயற்றியவரும்.)

திருக் களர்

ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிக ளவர்கள்

மாணாக்கரும்,

திருப் பூவணம் வேதாந்த மட ஸ்தாபகரும் ஆகிய

ஸ்ரீலஸ்ரீ

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளவர்களால்

இயற்றப் பெற்று

மதுரை

இந்துஸ்தாந் பிரிண்டிங்

ஆபீசில் அச்சிடப் பெற்றது.

விகிருதி] 1950 [ஆவணி

சிவமயம்.

## சாது சங்க நிறுவல் விழாக் கூட்ட வைபவம்.

விரோதி ஆண்டு, கார்த்திகைத் திங்கள், திரு வண்ணமலை ஈசாந்திய மடத்தில், கார்த்திகைத் தீபத் திரு விழாக் கண்டு களிப்பே ருவகை கொள்ள விருப் புற்று வந்த சாதுக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, சாதுக்களுக்கு என ஒரு சங்கம் இருக்க வேண்டும் என மஹா மநத்தினராய்ச் சங்கற் பித்தனர். அச் சங்கற்பம் சத்தியம் என்பதை உணர்த்துவான், வேண்டி சாதுக்கள் அனைவருக்கும், திருவாரூர் மடப் புரம் குரு தக்ஷிணமூர்த்தி சுவாமிகள் மடத்திற்கு, விரோதி ஆண்டு தைத் திங்கள் பத்தாந் திகதி திங்கட் கிழமை பஞ்சமி திதி, உத்திரட்டாதி நக்ஷத்திரம் கூடிய நன் னாள் ( 23—1—1950 ) அன்று வந்து சேரும்படி அழைப்பிதழ்கள், காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் திருப் பூவணம், மதுரை குட்டையா மடம் அருணாசல சுவாமிகள், சென்னை-சூளை-வீர. சுப்பைய ஸ்வாமிகள் மடம், வீர. சு. அநந்தாநந்த சுவாமிகள், திருவாரூர் மடப் புரம்-குரு தக்ஷிண மூர்த்தி சுவாமிகள் மடம், வீர. சு. ஷண்முகா நந்த சுவாமிகள் திரு வண்ண மலை-ஈசாந்ய மடம் இராம நாத சுவாமிகள், திருக் களர் - கோ. ஆ. மடம், கிருஷ்ண நந்த சுவமிகள் மேட்டுப் பாளையம் - சபாபதி சாமிகள் மடம், ந. இராமாநந்த சுவாமிகள் என்னும் எழுவர் கை யெழுத்துப் போட்டு அனுப்பினர்கள்.

அது போல், குறித்த காலத்தில் பல இடங்களிலும் இருந்து நூறு பெயர் வரைச் சாதுக்கள் வந்து கூடினர்கள். கூட்டம், திங்கள் செவ்வாய்-புதன் மூன்று நாளும் நடை பெற்றது. வந்த சாதுக்கள், தங்கள் தங்கள் மநத்தில் உள்ள அபிப்பிராயங்களை வெளியிட்டார்கள் வாத விவாதங்களும் செய்தார்கள். முடிவில் ஏக மநதாகச் **சாது சங்கம்** எனப் பெயர் வைத்து அதற்கு வேண்டிய விதிகளையும் நோக்கங்களையும் இன்ன வென நிலை நாட்டினர்கள். அதன் விவரம் சாது சங்க நோக்கங்களும், விதிகளும், என்னும் விஷயங்கள் உள்ள பக்கங்களில் காணலாம்.

சாது சங்கம் வருஷம் ஒரு முறை, மெய்யர்களின் வரிசைக் கிரமாக உள்ள ஊர்களில் ஏற்பட்டிருக்கும் மடங்களில், மூன்று நாள் கூடி வருஷ விழாக் கொண்டாடுவது என்றும், முதல் நாள் காலையில் எல்லாரும் குறித்த ஊருக்கு வந்து சேர வேண்டியது. மறு நாள் காலையில் சாது சங்க வரவு செலவு கணக்கு முதல் சகல விவகாரங்களையும் நிகதம் செய்ய வேண்டியது. மூன்றும் நாள் காலையில் சந்யாசிகள் தற் காலம் நடந்து கொள்ள வேண்டிய முறை களாகிய சந்யாச தர்மம் பற்றிய வாத விவாத விரிவுரை செய்ய வேண்டியது. மூன்று நாளும் மாலை நான்கு மணி முதல் எட்டு மணி வரை, நான்கு மணி நேரம், ஒவ் வொரு நாளும் வெவ் வேறு இரு சந்யாசிகளும் தலைவரும், சாதுக்களுக்கும், இதர ஜந சமுதாயத்திற்கும், உபயோக மாகப், பிரஹ்ம ஞாநம், அதன் சாதநமான-அகச் சாதநம், புறச் சாதநம்-புறப் புறச் சாதநங்களைப் பற்றிய சொற் பொழிவு செய்ய வேண்டியது என்றும், வருஷ மத்தியில், வரிசைக் கிரமங் கடந்து, சாது சங்க மகா நாட்டைக் கூட்ட வேண்டும் என்று யாருக்காவது நல் எண்ணம் உதிப்பின், அதற்கு செலவு ஆகும் பொருள் முழு மையும் அவர்கள் கொடுப்ப தாக ஒப்புக் கொண்டால், அதற்குச் சாது சங்கம், காரியக் கமிட்டியோ, ஆலோசனை சபையோ கூடி ஆராய்ந்து, அநுமதி யளித்துச் சாது சங்க மேளாவைச் சிறப் புறச் செய்ய வேண்டியது என்றும், வருஷம் ஒரு முறை கூடும் சாது சங்க மேளாவிற்கு, வரும் சாதுக்கள் அனைவருக்கும் உண்டி உறையுள், முதலியனவும், சபைக்கு வேண்டிய இட வசதி முதலியனவும், வரிசைக் கிரமமாக வுள்ள அந்த அந்த மடத்தார் ஒவ்வொருவரும் தம் சொந்த செலவில் கண்ணிய மாக நல்ல முறையில் எல்லாவற்றையும் நடத்துவிக்க வேண்டியது என்றும், சாது சங்க மஹா சபை மேளாவில், அவ ரவர்கள் சொந்த நலனையோ, அவ ரவர்கள் சொந்த வியவகாரங்களையோ கருதி, ஒருவருக் கொருவர் பகைமை செய்யக் கூடாது என்றும், சாதுக்கள் அனைவரும், சாது சங்க மேளாவில், நகமும் சதையும் போலவும், கண்ணும் இமையும் போலவும், ஒற்றுமையுடன் உற வாட வேண்டும் என்றும், எல்லாரும் ஏக மந தாகப் பேசி முடித்தார்கள்.

அன்று திநம் சாதுக்கள் அனைவரும் அடங்கா மகிழ்ச்சி அடைந்தனர். மகா நாட்டுக்கு வந்த சாதுக்கள் அனைவருக்கும், திருவாரூர் மடப்புரம் ஸ்ரீ குரு. தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் மடத்தார், ரூபா ஐ நூறு வரைச் செலவு செய்து மூன்று நாளும் அறு சுவை யோடு கூடிய உணவுகளை, அக முக மலர்ச்சியோடு ஆர அமர அளித்தது, யாவரும் மறமாரா வாழத்தற் குரிய தாகும்.

மகா நாட்டுக்கு வந்த சாதுக்கள் அனைவரும் ஏகோபித்து விரைவில் சாது சங்கத்தை நிறுவ ஒத்து உழைத்தமை என்னான்றும் போற்றத் தகுந்ததே யாகும். ஞாநங் கொடுப்பவள் ஸ்ரீ வித்தியா தேவியாகலின் தேவியின் சக்கிரமாகிய ஸ்ரீ சக்கரம், பிரணவ சகிதப் பிரபையோடு கூடிய முத்திரை வைத்துக் கொள்வது என்றும், நோக்கத்தில் மூன்று பிரிவும்,அதி ல் அவாந்தரப் பிரிவு ஐந்தும், விதியில், இருபத் தொரு பிரிவும், அதில் அவாந்தரப் பிரிவு இருபத்து இரண்டும் ஆக ஐம்ப தொரு அக்ஷர ரூப மாகக் கருதி விதி நோக்கங்களும், பெரும் பிரிவு இரு பத்து நான்கும் இரு பத்து நான்கு தத்துவங்களையும், அவாந்தரப் பிரிவு இரு பத் தேழும், ஸ்தூலசரீரம் 6. சூக்ஷமசரீரம் 20. காரண சரீரம் 1 ஆக மூன்று சரீரங்களா யிருக்கும் இரு பத் தேழு தத்து வங்களையும் உணர்த்தும் ஆறும் ஆறிஞர்கள் கூடிப்பிரிவினை செய்து ஏற்படுத்தி யிருக்கின்றார்கள்.

இன்னும் நிர்வாக அங்கத்தினர்கள் 16. போஷக அங்கத்தினர் 16. ஆலோசக அங்கத்தினர் 76. ஆக, மூன்று பிரிவில், நூற்றெட்டு அங்கத்தினர்களை கொண்டு இச் சபை இயங்கும் என்றும், புறம் பாய், விசேஷ அங்கத்தினர் அபிமானிகளும் இருபார்கள் என்றும், சாது சங்கம் ரிஜிஸ்தர் செய்யப்படும் என்றும், பல ஏற்பாடு களைச் செய்தார்கள். சாது சங்கம் என்ற சந்யாசி மேளாவுக்கு, வருஷம் ஒரு முறை கூடுவதற்கு, நூற்றெட்டு மடங்களும் சேர்ந் மூல தநமாக ரூபாய் இருபத் தையாயிரம் பண்டு வைக்க வேண்டும் என்றும், அதன் வரு வாயி லிருந்து தான், வருஷம் தோறும் வரும் அங்கத்தினர்களுக்கு செலவுக்குக் கொடுப்பது என்றும், மூல தநத்தை எவ்வாருய காரணத்திலும் செலவு செய்யக் கூடாது என்றும் ஏகோ பித்து முடிவு செய்தனர்.

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

திருப் பூவணம்.

விரோதி ஆண்டு தை 20உ

உ
சிவமயம்

விரோதி ஆண்டு கார்த்திகைத் திங்கள் திரு வண்ணமலை ஈசாந்ய மடத்தில், கார்த் திகைத் தீபத் திரு நாளில் கூடிய சாதுக் கள், சாது சங்கம் ஒன்று இருக்கவேண்டிய அவசியம் பற்றி ஆராய்ந்து முடிவு செய்து, கார்த்திகைத் திங்கள் இரு பத்து மூன்றும் நாள், அழைப் பிதழ் தயாரித்துப் பல இடங்களில் உள்ள எல்லாச் சாதுக் களுக்கும் அனுப்பி, அதன் படி திரு வாரூர் ஸ்ரீ தெக்ஷிண மூர்த்தி ஸ்வாமிகள், மடாலயத்தில், விரோதி ஆண்டு தைத் திங்கள் 10-ம் நாள் திங்கட் கிழமை பஞ்சமி திதி உத்திராட்டாதி நக்ஷத்திரம் (23—1—1950) கூடிய நன் னாளில் ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள் தலைமையில் வந்து கூடிய போது, "சாது சங்கம்" என்ற பெய ரோடு சங்கம் நிறுவப் பெற்றுக் கீழ்க் குறிப்பிட்ட தீர்மானங்கள் செய்தார்கள்.

## தீர்மானங்கள்.

1

இந்த சங்கத்திற்குப் திருப் பூவணம் ஸ்ரீ காசிகாநந்த ஞாநா சார்ய ஸ்வாமிகள் மடம், ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமி கள் தலைவ ராகவும், திரு வண்ணமலை - ஈசாந்ய மடம் - ஸ்ரீ இராம நாத சுவாமிகள் காரியதரிசி யாகவும், திரு வாரூர் - ஸ்ரீ குரு - தெக்ஷிண மூர்த்தி சுவாமிகள் மடம் — ஸ்ரீ ஷண்முகாநந்த சுவாமி கள் பொக்கிஷதா ராகவும், ஏக மனதாகத் தீர்மானிக்கப் பெற்றார்கள்.

## விதிகளும், நோக்கங்களும்,

## விதிகள்

2

(க) பெயர்.

இந்த சங்கமானது "சாது சங்கம்" என்ற பெயரால் வழங்கப் பெறும்.

(உ) இடம்

இந்தச் சங்கத்திற் கெனத் தனி யாக (நிரந்தர மாக) ஒரு கட்டிடம் ஏற்பாடு செய்யப் பெறும் வரையில் தாற்காலிக மாக நிர் வாகக் கவுன்ஸிலின் அபிப்பிராயத்திற்கும், சௌகரியத்திற்கும் ஏற்ப, அவ் வப்போது தலைமை ஸ்தாநம் மாற்றி அமைக்கப் பெறும்.

(ஊ) நோக்கம்.

(அ) சாதுக்களிடையே ஒற்றுமை நிலவச் செய்தல்.

(ஆ) சமுதாயத்தில் சாதுக்களுக்குப் பூர்வீகமாக ஏற்பட்டுள்ள கௌரவமான ஸ்தாநத்தை அடையத் தக்க பிரயத்தநங்களைச் செய்தல்-

(இ) சாதுக்களால் நிறுவகிக்கப் பெறும் சமாதி அதிஷ்டா நங்களில், அவரவர் உரிமைகளை ஸ்தாபித்துக் கொள்ளச் சட்ட ரீதி யான உதவிகளைச் செய்தல்.

(ஈ) சாதுக்களின் நலன் கருதியும், இதர ஜந சமுகத்தின் நலன் கருதியும், பாரமார்த்திகத் துறைகளிலும், லௌகிகத் துறைகளிலும், சமார புத்தக வெளியீடுகள், துண்டுப் பிரசுரங்கள், உபந்யா சங்கள் வாயிலாகப் பணி செய்தல்,

3 இந்தச் சங்கமானது, அரசியல் துறையிலும், மத வியவகாரங் களிலும், கலந்து கொள்ளாது.

4 நிர்வாகம்.

இந்தச் சங்கமானது ஒரு தலைவர், ஒரு காரிய தரிசி, ஒரு பொக்கிஷதார் ஆகிய மூன்று பெயர்களின் நிர்வாகத்தின் கீழ் இயங்கும்.

5 அங்கத்தினர்கள்.

இந்த சங்கமானது 1. நிர்வாகஸ்தர் 2. போஷகர் 3. ஆலோச கர் 4. விசேஷ அங்கத்தினர்கள். 5. அபிமாநிகள் என ஐந்து பிரிவுகள்கொண்ட தாக இருக்கும்.

(அ) நிர்வாகஸ்தர்.

மூல தந மாக ரூ 501—0—0 ஐந் நூற்றொன்று செலுத்தும் சாதுக்களைத் தலைவ ராகக் கொண்ட ஸ்தாபகங்கள் யாவும் இந்தப் பிரிவில் சேர்ந்தன வாம்.

(ஆ) போஷகர்.

மூல தந மாக ரூ 351—0—0 முன் னூற்றைம்பத் தொன்று செலுத்தும் சாதுக்களைத் தலைவராகக் கொண்ட ஸ்தாபகங்கள் யாவும் இந்தப் பிரிவில் சேர்ந்தன வாம்.

(இ) ஆலோசகர்.

மூல தந மாக ரூ 201—0—0 இரு நூற்றொன்று செலுத்தும் சாதுக்களைத் தலைவராகக் கொண்ட ஸ்தாபகங்கள் யாவும் இந்தப் பிரிவில் சேர்ந்தன வாம்.

(ஈ) விசேஷ அங்கத்தினர்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 12—0—0 பன் னிரண்டு வருஷம் தோறும் விடாது செலுத்தும் சாதுக்கள் அனைவரும் இந்தப் பிரிவில் சேர்ந்தவர்கள் ஆவார்கள்.

(உ) அபிமாநிகள்.

நன்கொடையாகத் தொகை அளிப்பவர்கள் யாவரும் இந்தப் பிரிவில் சேர்ந்தவர்களாவார்கள்.

6. நிர்வாகக் கவுன்ஸில்.

இந்தக் கவின்ஸில், நிர்வாக அங்கத்தினர்களான 16 பதினாறு ஸ்தாபகங்களின் தலைவர்களைக் கொண்டு அமைக்கப் பெறும்.

இந்தக் கவுன்ஸில் முக்கிய சந்தர்ப்பங்களில் கூடி அவசர விஷயங்களைக் கவனித்து வேண்டுவன செய்யும்.

7. காரியக் கமிட்டி.

இந்தக் கமிட்டி, நிர்வாகஸ்தர், போஷகர், ஆகிய இரு பிரிவுகளிலும் உள்ள 28 இருபத் தெட்டு ஸ்தாபகங்களின் தலைவர்களைக் கொண்டு அமைக்கப் பெறும்.

இந்தக் கமிட்டி, வருஷத்துக்கு ஒரு முறை, அவசியமானல் மேலும் கூடி, முன் நடைபெற்ற காரியங்களையும், இனி மேல் நடக்க வேண்டிய காரியங்களையும், ஆராய்ந்து நிர்வாகக் கவுன்ஸிலுக்கு உதவி செய்யும்.

8. ஆலோசனைக் கவுன்ஸில்.

(அ) இந்தக் கவுன்ஸில், நிர்வாகஸ்தர், போஷகர், ஆலோசகர், ஆகிய மூன்று பிரிவுகளிலும் உள்ள 51 ஐம்பத் தொரு ஸ்தாபனங்களில் தலைவர் களைக் கொண்டு அமைக்கப் பெறும்.

(ஆ) இந்தக் கவுன்ஸில், வருஷத்துக்கு ஒரு முறை கூடி, முன் நடை பெற்ற காரியங்களையும், இனி மேல் நடக்க வேண்டிய காரியங்களையும் பரிசீலனை செய்து, நிர்வாகக் கவுன்ஸிலுக்கு ஆலோசனை கூறும்.

(இ) நிர்வாகக் கவுன்ஸில் சமர்ப்பிக்கும் வருஷாந்தர (வேறு வருஷப்) பட்ஜெட்டை ஆராய்ந்து சாங்ஷன் செய்யும்.

(ஈ) நிர்வாகக் கவுன்ஸில் சமர்ப்பிக்கும் வருஷாந்த (வருஷ முடிவு) வரவு செலவு கணக்குகளைப் பரிசீலனை செய்து அங்கீகாரம் செய்யும்.

(உ) நிர்வாகஸ்தர் 16 பதினறுவர்களில், தகுதி உடைய ஒரு வரை, மூன்று வருஷத்துக்கு ஒரு முறை தேர்ந்து எடுத்து தலைவ ராக நிறுவும்.

(ஊ) நிர்வாகஸ்தர்களில் வரிசைக் கிரமமாக மூன்று வருஷத்துக்கு ஒரு முறை, காரியதரிசியும், பொக்கிஷதாரும், தேர்ந்தெடுக்கப் பெறுவர்.

9 மஹா சபை.

இந்தச் சபை, நிர்வாகஸ்தர், போஷகர், ஆலோசகர், விசேஷ அங்கத்தினர் ஆகிய நான்கு பிரிவும் சேர்ந்த அங்கத்தினர்களால் அமைக்கப் பெறும்.

இந்த சபை வருஷம் ஒரு முறை கூடிச் சாது சங்கத்தின் பொதுப் படையான ஆக்க வேலைகளில், ஆலோசனை கூறுவதோடு, வேண்டிய உதவிகளைச் செய்யும்.

10. தலைவர் செயல்.

(1) சாது சங்கத்தின் மஹாசபை முதலிய சகல கூட்டங்களிலும் தலைமை தாங்குதல். (2) கூட்டங்களை நிர்வகித்துப் பக்ஷபாத மின்றி நடத்தல். (3) கூட்டங்களில் ஆலோசனைக்கு வரும் விஷயங்களில், விவாதங்கள் முதலியன சேர்மையோடு நடைபெறச் செய்தல். (4) கூட்டங்களில் உபந்நியாசகர்களையும், விஷயங்களையும், தேர்ந் தெடுத்தல் முதலியன.

11. காரிய தரிசி செயல்.

(1) சாது சங்கத்தின் வரவு செலவு கணக்குகளைச் சரியாக வைத்துக் கொள்ளுதல். (2) அவஸ்யமான கடிதப் போக்கு வரத்துக்களைக் கவனித்தல். (2) சந்தா முதலியன வசூல் செய்தல். (4) கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்தல். (5) அழைப்பு அனுப்புதல். (6) சாது சங்கத்தின் சகல காரியங்களையும் முறையாக நடைபெறச் செய்தல் முதலியன. (7) ரூபாய் பத்துக்குள் அவசியமான, செலவுகளைச் செய்து கொள்ளலாம். (8) ரூபாய் பத்துக்கு மேல் இருபத் தைந்துக்குள், தலைவர் அநுமதி பெற்றுச் செலவு செய்து கொள்ளலாம். (9) ரூபாய் இருபத் தைந்துக்கு மேல், ரூபாய் நூறு வரைக் காரியக் கமிட்டியின் அநுமதியின் பேரில், பொக்கிஷதாரிடம் பணம் பெற்றுச் செலவு செய்து கொள்ளலாம். (10)ரூபாய் இருபத் தைந்து வரைக் காரியதரிசியானவர் இருப்பு வைத்துக் கொள்ளலாம். (11) ரூபாய் இருபத் தைந்துக்கு மேற்பட்ட தொகையை அவ் வப் போது பொக்கிஷதாரிடம் கொடுத்துக் கையெழுத்து வவுச்சர் பெற்றுக் கொள்ளவேண்டும்.

12. பொக்கிஷதாரர் செயல்.

(1) சாது சங்கத்தின் நிதியையும், இதர மதிப் புள்ள வஸ்துக்களையும், பாது காத்து வரவேண்டும். (2) மேற்படி நிதியைக் காரியக் கமிட்டியின் தீர்மானப்படி பேங்கில் சாது சங்கத்தின் பெயரால் போட்டு வைத்து, அவ் வப் போது வேண்டிய தொகைக்குத் தலைவரும், காரிய தரிசியும், கை யெழுத்திட்ட வவுச்சரின் பிரகாரம் செக் மூலம் பேங்கில் பணம் பெற்றுக் கொள்ளல் வேண்டும். (3) சாது சங்கத்தின் நிதி சம்பந்தமான' கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும்.

13. மூல தந விபரம்.

சங்கத்தின் மூல தநத்தி லிருந்து எந்தவிதமான செலவு செய்ய, யாருக்கும் அதிகாரம் இல்லை.

14. செலவு சாங்ஷன்.

மேற்படி மூல தநத்தின் வட்டிப் பணத்தையும், இதர வருமானத்தையும் கொண்டு, வருஷ வருஷம் கூடும் ஜெனரல்பாடி மீட்டிங்கில் செலவு செய்ய பட்ஜட் சாங்கிஷன் செய்யவேண்டியது.

15. ஸ்தாவர சொத்து ஆர்ஜிதம்.

போதுமான மூல தநம் சேர்ந்ததும், அந்தப் பணத்தைக் கொண்டு, காரியக் கமிட்டியின் அங்கிகாரத்தின் பேரில் நிலையான கட்டிடம் வாங்கி வைக்க வேண்டியது.

16. செலவு இனம்.

வருஷம் தோறும் நடை பெறும் ஜெனரல் பாடி மீட்டிங்கிக்கு விஜயம் செய்யும், நிர்வாகஸ்தர், போஷகர், ஆலோசகர், ஆகிய மூன்று பிரிவுகளைச் சேர்ந்த ஸ்தாபநங்களின் தலைவர்களுக்கு மட்டும், அவ ரவர்கள் இடத்தி லிருந்து மீட்டிங் நடை பெறும் இடத்துக்குப் போக வர (3) மூன்றுவது வகுப்பு ரயில் சார்ஜ் கொடுப்பது என்பது தீர்மானிக்கப் பெற்றுள்ளது.

---

## கீழ் கை யொப்பம் இட்டவர்கள் ஆஜராக இருந்து கை யொப்பம் இட்டார்கள்.

---

1. காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் (திருப் பூவண மடம்)
2. அருணசல ஸ்வாமி ( கள். மதுரை குட்டையையா மடம் )
3. வீர. சு. அநந்தாநந்த சுவாமி ( கள். சென்னை-சூளை-சுப்பையா சுவாமிகள் மடம் )
4. வீர. சு. ஷண்முகாநந்த சுவாமி ( கள். மடப் புரம் திரு வாரூர், தெக்ஷிணமூர்த்தி மடம் )
5. கிருஷ்ணைநந்த சுவாமி ( கள். திருக் களர் மடம் )
6. சபாபதி சுவாமி ( கள். மௌந சுவாமிகள் மடம் சிதம்பரம் )
7 இராம நாத சுவாமி ( கள். ஈசாந்ய மடம் திரு வண்ணு மலை ).

8. ந. இராமாநந்த சுவாமி ( கள். சபாபதி சாமி மடம் மேட்டுப் பாளையம் )
9. சிந்மயாநந்த சுவாமி ( கள். பிரஹ்மாநந்த சாமிகள் மடம் மதுரை )
10. ஆறு முக ஸ்வாமி ( கள். படி முக்கல் மடம் திண்டி வனம் வழி )
11. அத்வைதாநந்த சுவாமி ( கள். குன்று மணிச் சாமி மடம் திருச் சிராப் பள்ளி )
12. வாசுதேவ சுவாமி ( கள். பால் சாமி மடம் தஞ்சா வூர் )
13. சிதம்பர சுவாமிகள். ( பசுபதி கோவில் ஆறு முக சாமி மடம் )
14. சித. காசி வாசி- சொக்க லிங்க சுவாமி ( புதுக் குடி )
15. கோ. மு. காசி நாத சுவாமி ( கள். பரி பூரண சாமி மடம் இடைக் காட் டூர் )
16. சித. நாராயண சாமி ( கள். அறு பத்து மூவர் மடம் திரு வை யாறு )
17. சங்கராநந்த சுவாமிகள் ( சோம நாதன் கோவில் மடம்-மடப் புரம் திரு வாரூர் )
18. அமிர்த லிங்க வாமி ( கள். நாராயண சாமி மடம் மானு மதுரை )
19. மகா. கோவிந்த சுவாமி ( கள். சிவ சுப்பிர மணிய சாமி மடம் ஏகாம்பரக் குப்பம் )
20. கோ. மு. விமலாநந்த சுவாமி ( கள். முகதாநந்த சுவாமிகள் மடம் கோவிற் பட்டி )
21. பெருமா ளையா ( சின்ன மடம் துறை யூர் )
22. க. ம. பரமாநந்த சுவாமி ( கள். மஹா தேவ சுவாமி மடம் திருப் பரங் குன்றம் )
23. வீர. வேதாநந்த சுவாமி ( கள். வேதாநந்த ஆசிரமம் புதுச் சேரி )
24. இ. ரா. சுவாமி - சதாநந்தம் ( இராம லிங்காநந்த ஆசிரமம் மகா தேவ பட்டணம் )
25. ம. வெ. ஆ. கிருஷ்ண சாமி ( கள். நட ராஜ மூர்த்திகள் மடம் களி மங்கலம் தஞ்சா வூர் )
26. சொரூபாநந்த சுவாமி ( மெய் கண்டார் மடம் கொச்சியம் )
27. குமராநந்த சுவாமி ( கள். அறி வாநந்த ஆசிரமம் வல்ல னூடு )
28. மஹேசுவராநந்த கிரி ( இராம சாமி சாமி மடம் மேலப் புனல் வாசல் )
29. இராமாநந்த சரஸ்வதி சாமி ( கள். கைவல்ய சாமி மடம் இராம நாத புரம் )
30. கருணைப் பிரகாச ஐயா ( இராம லிங்க சாமி மடம் தாரா னூர் திருச் சிராப் பள்ளி )

## சாது சங்கத்தினைச் சார்ந்தவர்கள்.

### நிர் வாகஸ்தர்.

| | ரூ |
|---|---|
| 1. ஸ்ரீ சோம சுந்தர ஞாந தேசிக ஸ்வாமிகள், முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் மடம் கோவி லூர் | 501 |
| 2. ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள், காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் மடம் திருப்பூவணம் | 501 |
| 3. ஸ்ரீ அருணசல ஸ்வாமிகள், குட்டை யையா மடம் மதுரை | 501 |
| 4. ஸ்ரீ வீர. சு. அநந்தாநந்த சுவாமிகள், வீர. சுப்பையா ஸ்வாமிகள் மடம், - குளை - மதராஸ் | 501 |
| 5. ஸ்ரீ வீர. சு. ஷண்முகாநந்த சுவாமிகள், குரு. தக்ஷிணமூர்த்தி சுவாமிகள் மடம் - மடப்புரம் [திரு வாரூர் | 501 |
| 6. ஸ்ரீ கிருஷ்ணாநந்த சுவாமிகள் - கோ. ஆ. மடம், திருக் களர் | 501 |
| 7. ஸ்ரீ சபாபதி சுவாமிகள், - மௌந சுவாமிகள் மடம், சிதம்பரம் | 501 |
| 8. ஸ்ரீ இராம நாத சுவாமிகள், ஈசாந்ய மடம், திரு வண்ணு மலை | 501 |
| 9. ஸ்ரீ ந. இராமாநந்த சுவாமிகள், சபாபதி சுவாமிகள் மடம், மேட்டுப் பாளையம் | 501 |
| 10. ஸ்ரீ சிந்மயாநந்த சுவாமிகள், பிரஹ்மாநந்த சுவாமிகள் மடம், மதுரை | 501 |
| 11. ஸ்ரீ ஆறு முக சுவாமிகள், படி முக்கல் | 501 |
| 12. ஸ்ரீ வே லாயுத சுவாமிகள், அழகாநந்தா சாமி பவழக்குன்று மடம், திரு வண்ணு மலை | 501 |

### ஆலோசகர்.

| | |
|---|---|
| 13. ஸ்ரீ சிதம்பர சுவாமிகள், ஆறு முக சுவாமிகள் மடம், பசுபதி கோவில் | 351 |
| 14. ஸ்ரீ அத்வைதாநந்த சுவாமிகள், குன்றிமணிச் சாமி மடம், திருச் சிறுப் பள்ளி | 351 |
| 15. ஸ்ரீ வாசுதேவ சுவாமிகள், பால் சாமி மடம், தஞ்சா வூர் | 351 |

### போஷகர்.

| | |
|---|---|
| 16. ஸ்ரீ சங்கராநந்த சுவாமிகள், சோம நாதன் கோவில் மடம், திரு வாரூர் | 201 |
| 17. ஸ்ரீ சித. நாராயண சுவாமிகள், சிங்கப் பூர் சாமி மடம், திரு வை யாறு | 201 |

| | | |
|---|---|---|
| 18. | ஸ்ரீ அம்ிர்த லிங்க சுவாமிகள், நாராயண சுவாமி மடம், பேல்கரை மாஞ மதுரை | 201 |
| 19. | ஸ்ரீ சொரூபாநந்த சுவாமிகள், மெய் கண்டார் மடம், கொச்சியம் | 201 |
| 20. | ஸ்ரீ மகா. கோவிந்த சுவாமிகள், சிவ சுப்பிரமணிய சுவாமி மடம் ஏகாம்பரக் குப்பம் | 201 |
| 21. | ஸ்ரீ பெருமாள் ஐயா - சின்ன மடம் தறை யூர் | 201 |
| 22. | ஸ்ரீ கோ. மு. விமலாநந்த சுவாமிகள், முக்தாநந்த ஆசிரமம், கோவிற் பட்டி | 201 |
| 23. | ஸ்ரீ குமராநந்த ஸ்வாமிகள், அறிவாநந்த ஆசிரமம், வல்ல ஞடு | 201 |
| 24. | ஸ்ரீ க. ம. பரமாநந்த சுவாமிகள், மகா தேவ சுவாமிகள், வேதாந்த மேல மடம், திருப் பரங் குன்றம் | 201 |
| 25. | ஸ்ரீ கோ. மு. காசிநாத சுவாமிகள், பரி பூரண சாமி மடம், இடைக் காட்டூர் | 201 |
| 26. | ஸ்ரீ வீர. வேதா நந்த சுவாமிகள் - வேதா நந்த ஆசிரமம், புதுச் சேரி | 201 |
| 27. | ஸ்ரீ மகேசுவராநந்த கிரி சுவாமிகள், இராம சாமி சாமி மடம், மேலப் புன்னை வாசல் | 201 |
| 28. | ,, இராமாநந்த சரஸ்வதி சுவாமிகள், கைவல்ய சாமி மடம், இராம ஞத புரம் | 201 |
| 29. | ,, ம. வெ. ஆ. கிருஷ்ண சுவாமிகள், நடராஜ மூர்த்திகள் மடம், களி மங்கலம் - தஞ்சா ஊர் | 201 |
| 30. | ,, முனிச் சாமி சாமிகள், மாணிக்க சாமி மடம், பூண்டி | 201 |
| 31. | ,, ஜகந் நாத சுவாமிகள், சுப்பிரமணிய சாமி மடம், தேவஞம் பட்டு | 201 |
| 32. | ,, சின்னச் சாமி சாமிகள், பெரிய சாமி மடம், பழங் கோவில் | 201 |
| 33. | ,, கிருஷ்ண சாமி சாமிகள், கூடல் அம்மா மடம் பார்த்திப ஞர் | 201 |
| 34. | ,, இராமநந்த ஸ்வாமிகள், பொன்னம்பல சாமிகள் மடம், வாணியம் பாடி | 201 |
| 35. | ,, சீநிவாச ஸ்வாமிகள், அருணசல சாமிகள் மடம், பஞ்ச நதிக் குளம் | 201 |
| 36. | ,, நமசி வாய ஸ்வாமிகள், கருணநந்த ஆசிரமம், திருக் கழுக் குன்றம் | 201 |
| 37. | ,, துரைச் சாமி ஸ்வாமிகள், விடோபா சாமி மடம், போளுர் | 201 |
| 38. | ,, சுப்பையா ஸ்வாமிகள், வையா புரிச் சாமி மடம், நல் லூர் பேட்டை, குடி யேற்றம் | 201 |

சந்தா தாரர்கள்.

| | | |
|---|---|---|
| 39. | ,, இ. ரா. சதாநந்த சுவாமிகள், இராம லிங்காநந்த ஆசிரமம், மகா தேவபட்டணம் | 12 |
| 40. | ,, கருணைப் பிரகாச ஐயா இராம லிங்க சாமி மடம், தாரா ஞர் - திருச் சிறுப் பள்ளி | 12 |

KOVILOOR

# சாது சங்கத் தினைச் சார வேண்டிய வர்கள்.

---

1. ஸ்ரீ சுவாமிகள், கோ. சித. மடம், சிதம்பரம்
2. ,, சுவாமிகள், கோ. ஆ. பொ. மடம், பொருள் வைத்த சேரி, சிக்கல்
3. ,, ஸ்வாமிகள், தத்து வராய சுவாமிகள் மடம், இறும் பூதூர்
4. ,, அரு ணசல சுவாமிகள், கா. செ. மடம், காளையார் கோவில்
5. ,, சுவாமிகள், கோ. ராம. மடம் சாக்கோட்டை
6. ,, இராம சாமி சுவாமிகள், பெரிய மடம், மழ பாடி
7. ,, சுவாமிகள், சின்ன மடம், மழ பாடி
8. ,, மகேசுவரா நந்த கிரி, கந்த சாமி மடம், வேதா ரண்யம்
9. ,, அசலா நந்த சுவாமிகள், பால்ச் சாமி மடம், ஆண்டி யப்பன் காடு
10. ,, மதேவ ஐயா, மொட்டைய சாமி மடம், செட்டியார் குத்தகை
11. ,, வேலுச் சாமிகள், தண்ணீர் பந்தல் மடம், பிச்சநூர் குடி யேற்றம்
12. ,, சாது சாமிகள், சாது ஆசிரமம், பழனி
13. ,, பட்டினச் சாமி மடம், பழனி
14. ,, மேல மடம், குன்றுக் குடி



15. ஸ்ரீ பத்மநாப சுவாமிகள், கோவிந்தானந்த சேவா ஆசிரமம், பிள்ளையார் பட்டி
16. ,, முக்தானந்த சுவாமிகள், க. சிவப்பிரகாச சுவாமிகள் மடம், வியாசர்பாடி சென்னை
17. ,, சாந்தலிங்க சுவாமிகள் மடம், பேரையூர்
18. ,, சேஷாசல சாமிகள், மாத்தூர் சாமி மடம், காஞ்சிபுரம்
19. ,, திரிவேணிகிரி சாமிகள், காஞ்சிபுரம்
20. ,, **சிவராஜானந்த சுவாமிகள், ராமா ஆசிரமம், கார்கூர்**
21. ,, விவேகானந்தா மடம், பசுமலை மதுரை
22. ,, சிவராம சுவாமிகள், வேதாந்த மடம், ஸ்ரீரங்கம்
23. ,, சிவானந்த சுவாமிகள், வேதாந்த மடம், இளையான்குடி
24. ,, சிவ ஆசிரமம், கந்தமாதந பர்வதம் இராமேசுவரம்
25. ,, சங்கர சாமி மடம், அகிலாண்டபுரம்
26. ,, காப்பலூர்
27. ,, ராமசாமி சுவாமிகள், பவானி
28. ,, சேலம்
39. ,, திருப்புறம்பியம்
30. ,, உள்ளிக்கோட்டை, மன்னார்குடி வழி
31. ,, ஷண்முக சாமி மடம், வளவனூர்
32. ,, யோகானந்த சாமி மடம், மதுரை
33. ,, குச்சனூர்

34. ஸ்ரீ ஆத் தூர்

35. ,, நடேச சுவாமிகள், தபோவநம் காரியான் ஊர்

36. ,, கிருஷ்ண நந்த சுவாமிகள், செ. அ. வ. மடம், பொதட்டூர் பேட்டை

37. ,, பிரகாசா நந்த சுவாமிகள், கந்த சாமி மடம், ராம கிருஷ்ணம ராஜு பேட்டை

38. ,, சாதுக்கள் மடம், கல்லல்

39. ,, கணபதி சாமி மடம், விருத்தா சலம்

40. ,, அமிர்த லிங்க சாமிகள், ஆறுமுக சாமி ஆசிரமம், கரிசல் குளம் மாஞ் மதுரை

41. ,, அத்வை தாநந்த சுவாமிகள், புதூர்

42. ,, நாராயண சாமிகள், மௌந சாமிகள் மடம், சிவ கெங்கை

43. ,, சதா சிவ சாமிகள், வீர சக்தி கணேசர் மடம், ஹரிவெத்தி

44. ,, ராம லிங்க ஐயா, நடராஜா மடம், வேப்பம் சேரி

45. ,, சொரூ பாநந்த சாமிகள், பாலூர்

